## பொது உடைமை பற்றி காந்தி:

"பொது உடைமை என்ற சொல்லின் பொருளை, நான் இன்னும் சரியாக அறியேன். தனி உடைமையைப் போக்குவதே அதன் லட்சியமாகும் என்று தோன்றுகிறது. பற்றின்மை என்பது பொருளாதாரத் துறையில் சொல்லப்படும் நிலை, உடைமையைப் பற்றுவதே யாகும் இது. இந்த லட்சியத்தை அனைவரும் ஒன்றுக் கொள்வார்களேயானால், அல்லது அமைதியாக எடுத்துச் சொல்ல அவர்கள் மனதை திருப்பக்கூடுமானால் இதற்குச் சமமாகச் சொல்லக்கூடியது வேறு எதுவுமேயில்லை. நான் சாந்த வழி, பலாத்காரத்தை உபயோகிப்பதை பொது உடைமை தடை செய்யவில்லை. அதுமட்டுமா? தனி உடைமையை மறுதலைச் செய்வதற்கும், அப்படி மறுதலைச் செய்த சொத்தைப் பொது சொத்தாக்கி அதை வைத்திருப்பதற்கும் பொது உடைமை பலாத்காரத்தை தாராளமாக உபயோகிக்கிறது. இது உண்மையானால் அப்பொது இருக்கும் உருவத்தில் பொது உடைமை நீண்ட காலம் நிலைத்திருக்காது என்று நான் எண்ணுகிறேன். பலாத்காரத்தினால் நிலைபேறுடையதாய் எதையும் செய்ய முடியாது என்ற உறுதியான நம்பிக்கை உடையவன் நான். இதை ஒரு உண்மையை மட்டும் நம்மால் மறுக்க முடியாது. பொது உடைமை என்ற லட்சியத்தை எண்ணற்ற ஆண்களும் பெண்களும் உண்மையான தியாகம் செய்து வழிபட்டு வருகிறார்கள். சிறந்த மேதாவிகளான லெனின் போன்றோர் தியாகமும் சேர்ந்து அதை உறுதி படுத்தியிருக்கிறது. எனவே இந்த லட்சியம் வீண் போக மாட்டாது. இவர்களது உன்னதமான தியாக வாழ்க்கை எப்போதுமே பிரகாசித்துக் கொண்டிருக்கும். காலம் செல்லச்செல்ல இந்த லட்சியத்தைப் புனிதப்படுத்துவதோடு, அவர்கள் செய்த தியாகம் - அந்த லட்சியம் காலாவல் [illegible] செய்யும். ****

* மனிதன் உழைப்பினால் உயர்கிறான். தன்னலமற்றுச் சமூகத்துக்கும், தேசத்துக்கும் தொண்டு செய்வதனால் உயர்கிறான். தளராத ஊக்கத்தினாலும் உயர்கின்றான். முயற்சியாலும் உயர்கின்றான்.

## குழந்தைகளுக்கு நல்லுணவு:-

குழந்தைகளுக்கு மீன் நல்ல உணவாகும். ஆனால் பொரித்ததாக இல்லாமல் வேக வைக்கப்பட்டதாக இருக்கவேண்டும். இதில் உடல் வளர்ச்சிக்குத் தேவையான புரதச் சத்து இருக்கிறது. குழந்தைக்கு மூன்று மாதம் ஆனதும் கொடுக்கலாம். இரண்டு மாத குழந்தைக்கு வாழைப்பழமும் நல்ல உணவாகும். ஆனால் பழுத்ததை நன்றாய் நசுக்கி வெந்நீரில் தோய்த்து கடைந்தும் கொடுக்கலாம். ஆரஞ்சுப்பழம் கிடைக்காவிட்டால் குழந்தைகளுக்கு ஒரு மாதம் தாண்டு தக்காளிச் சாறு பிழிந்து (இது கெட்டியாக இருக்கவேண்டும்) தண்ணீரால் நன்கு வடிகட்டிக் கொடுத்தால் வைட்டமின் ஸி சத்து ஏராளம் கிடைக்கும். வைட்டமின் "ஏ" இல்லாவிடில் குழந்தைகளுக்கு கண்நோய் வருகிறது.